9th September 1960]

(b) Eight more Percussion drills and 6 more Rotary drills.

(c) Sanction has already been accorded for the purchase of these drills. In regard to the purchase of 8 Percussion drills and one Rotary drill, release of foreign exchange by the Government of India is awaited. Action for the purchase of 5 Rotary drills is being taken by the Director of Agriculture.

SRI V. SUBBIAH : ஸார், இந்த பவர் ட்ரில் மெஷின் சாதாரணமாக நீர் வரண்டு போன இடங்கள், பாறையுள்ள இடங்கள், இந்த இடங்களுக்குத் தான் தேவைப்படுகிறது. ஆனால் போதிய அளவு கொடுக்கப்படுவதில்லை என்று தெரிகிறது. ஆகவே இப்படிப்பட்ட இடங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து இந்த மெஷின்களைக் கொடுக்க வேண்டும் என்று சர்க்கார் உத்தரவு போடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்படிப்பட்ட பிரதேசங்களுக்கு எல்லாம் வாங்க வேண்டுமென்று திட்டம் இருக்கிறது. இவைகளை அதிகமாக வரவழைக்க வேண்டுமென்றால் அந்நிய நாட்டு செலாவணி அதிகமாக தேவைப்படும். ஆகவே இதைப் பற்றி மத்திய அரசாங்க நிதி அமைச்சரிடம் சொன்னேன். அவர்களும் இதில் ஒரு பகுதி தருவதாகச் சம்மதித்து இதற்கு சாங்க்ஷன் செய்திருப்பதாகவும் தெரிகிறது. புதிதாக எங்கெல்லாம் இந்த மெஷின் வேண்டும் என்று அவசியமிருக்கிறதோ அங்கெல்லாம் கொடுக்கப்படும்.

SRI A. R. SUBBIAH MUDALIAR : ஜில்லாவாரியாக எத்தனை டிரில்கள் வைத்திருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா ? 9-0 a.m.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றித் தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI M. D. THIAGARAJA PILLAI : ரோட்டரி மெஷின்கள் தண்ணீர் இறவைக்கு உபயோகமாக இருக்கிறது. அவைகளை டெஸ்ட் செய்வதற்கு பம்ப்கள் இல்லை. பம்ப்கள் இல்லாததால் ஒரு ரோட்டரியை ஒரு இடத்தில் போட மூன்று மாதம் வரையில் தாமதம் ஆகிறது. அம்மாதிரி இடங்களில் பம்ப் செட் வைத்து டெஸ்ட் செய்ய ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றியும் அரசாங்கம் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறது.

## *Rice Mills*

*561 *Q*.—SRI S. M. ANNAMALAI : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் வடாற்காடு மாவட்டம், போளூர் தாலூகா, களம்பூர் கிராமத்திலிருந்து ரைஸ் மில் லைசென்ஸ் கோரி எத்தனை விண்ணப்பங்கள் வந்துள்ளன ?

(ஆ) 1958-ம் ஆண்டு ரைஸ் மில் லைசென்ஸ் வழங்கும் சட்டத்தின்படி தள்ளுபடி செய்யப்பட்ட மனுதாரர்கள் மறுபடியும் விண்ணப்பங்கள் கொடுத்துள்ளார்களா ?

(இ) அப்படியானால், எத்தனை பேர் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) *to* (*c*) The information is being collected and will be placed on the table of the House as soon as possible.